


# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

SHIVAJI
TAMIL WEEKLY
33rd year
of Publication
24—12—1967


# அமெரிக்காவும் ரஷ்யாவும் ஒத்துழைத்தால் என்ன ?

— செஸ்ட்டர் போல்ஸ்

ஆக்கமான முறையில் ஒன்று சேர்ந்து உழைக்க உங்கள் நாட்டுக்கும் எனது நாட்டுக்கும் உள்ள திறனையே பெருமளவுக்குப் பொறுத்தது, நமது உலகின் சமாதானமும் முன்னேற்றமும் என்று பல ஆண்டுகளாகவே கருதி வருபவன் நான்.

நமது இன்றைய உலகின் சிக்கலான பிரச்னைகள் அனைத்திலும் நாம் உடன்பாடு எதிர்பார்க்க முடியாதென்பது தெளிவு. நமது பொருளாதார, அரசியல் கோட்பாடுகள் வெவ்வேறானவை; எனவே, சில பிரச்னைகளை நாம் வெவ்வேறு கண்கொண்டு பார்க்கிறோம்; இது தவிர்க்கவே முடியாததே.

எனினும், இந்தியாவைப் பொறுத்தவரை, நமது நியாயமான தேசிய நலன்கள் நெருக்கமாக இணைந்திருக்க முழு நியாயமுண்டு. வர வரப் பெருகி வரும் அளவில் சமுதாய நீதியுடன் அரசியல் உறுதி நிலையும், பொருளாதார முன்னேற்றமும் காண இந்தியாவின் சொந்த மாபெரும் முயற்சியை ஆதரிப்பதே அது.

இந்தியா இந்த இலட்சியங்களை அடைவதில் உதவும் வகையில், கடும் உணவுப் பற்றாக் குறையைத் துடைக்க இந்தியாவுக்கு 520 லட்சம் டன்களுக்குமேல் அமெரிக்கா உணவு தான்யங்கள் அனுப்பியுள்ளது. இந்திய நாட்டு ரயில் பாதைகளைப் புதுமைப்படுத்தவும், மின் விசை உற்பத்தியைப் பெருக்கவும், மலேரியா நோயை ஒழிக்கவும், புதிய உர ஆலைகளும் வேளாண்மைப் பல்கலைக்கழகங்களும் நிறுவவும், பொதுவாக மக்கள் அனைவருடைய வாழ்க்கை நிலைகளும் மேம்படவும்கூட நாங்கள் உதவியுள்ளோம்.

ரஷ்யாவும்கூட இந்தியாவுக்குக் குறிப்பிடத்தக்க பொருளாதார உதவியளித்துள்ளது. மேலும், தெற்கு ஆசிய சமாதானத்துக்கு உங்களது அரசாங்கம் 1966-ல் ஒரு பேருதவி செய்தது; இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இடையே ஒரு சமாதான அடிப்படையை உருவாக்கிய தாஷ்கெண்ட் மகாநாட்டுக்கு உங்கள் அரசு அப்போது ஏற்பாடு செய்ததையே குறிப்பிடுகிறேன். எனினும், இந்தியப் பொருளாதார வளர்ச்சியை விரைவுபடுத்த உதவுவதில் ஒன்று சேர்ந்து உழைக்கும் நமது திறன், ரேடியோ பீஸ் அண்ட் பிராகிரஸ் ஒலிபரப்புக்களால் ஊறுபடுகிறது, இது தற்போது தொடர்ச்சியாக பகை நோக்கமுள்ள நிகழ்ச்சிகளை இந்தியாவுக்கு ஒலிபரப்பி வருகிறது. இவை எனது அரசாங்கத்துக்கும் மக்களுக்கும் எதிரான அவதூறுகள் கொண்டவை.

இந்தியாவில் தற்போது வாழ்ந்து வரும் அமெரிக்கர்கள் ஒவ்வொருமே இந்தியாவின் முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டை போட்டு, உள்நாட்டு பூசலை உருவாக்கி, அரசாங்க அதிகாரிகளுக்கு லஞ்சம் கொடுக்கும் ரகசிய உளவாளிகள் என்று உங்கள் ஒலிபரப்புகள் கூறுகின்றன. கிழக்கு பாகிஸ்தானையும் மேற்கு வங்காளத்தையும் ஒரு தனி சுதந்திர நாடாக இணைக்க நான் முயன்று வருவதாகக்கூடக் குற்றம் சாட்டப்பட்டுள்ளேன்.

பலசமயங்களில் புதுடில்லியிலுள்ள எங்களது அமெரிக்கத்தூதரகஊழியர்கள் இந்த ஒலிப்பரப்புகள் குறித்து இங்கு புது டில்லியிலுள்ள ரஷ்யப் பிரதிநிதிகளுடன் தனிப்பட விவாதித்துள்ளனர். ஒவ்வொரு தடவையும் இங்குள்ள உங்களது தூதரகம் உங்களது ஒலிப்பரப்புக்களில் இடம்பெறும் விஷயங்கள்பற்றித் தனக்குத் தெரியாதுஎன்றுகூறிவந்துள்ளது.

இதுபோன்ற ஒலிபரப்புக்கள் உங்கள் நாட்டின் நலன்களுக்கும், இந்திய மக்களின் நலன்களுக்கும் சிறப்புறப் பயன்படுபவையா என்று பரிசீலிக்குமாறு உங்களிடம் கூறவே இதை எழுதுகிறேன்.

அமெரிக்க மக்களுக்கு விரோதமாக நீங்கள் பரப்பி வரும் பொய்யும் புனை சுருட்டுகளும் இந்தியாவில் எவை நமது பொது இலட்சியங்களாக இருக்க வேண்டுமோ, அவற்றிற்குப்பயன்படுபவை என்று நீங்கள் உண்மையிலேயே நம்புகிறீர்களா ? இவ்வளவுக்கும், இந்தியாவின் வெற்றிக்கு உறுதிசெய்வதில்வேறுஎந்தவெளிநாட்டினரைக் காட்டிலும் அதிகமாக உதவிசெய்துவருபவர்கள் அமெரிக்கர்கள்என்பது உண்மை.

கடுமையான இந்தத்தாக்குதல்களைக் கைவிட்டு, இந்திய-ரஷ்ய—அமெரிக்க மக்களிடையேஇன்னும் நெருக்கமான நல்லுணர்வு ஏற்படுத்தும் ஒரு பொது முயற்சியில் ஏன் சேரக் கூடாது ? நமது மூன்று நாட்டு மக்களும் சேர்ந்து, கிட்டத்தட்ட மக்கள் குலத்தில் மூன்றில் ஒரு பங்கு ஆகிறோம்.

ரஷ்யாவும், அமெரிக்காவும்ஒன்றுசேர்ந்துஉழைத்து

[ 4-ம் பக்கம் பார்க்க ]

# நீங்கள் எடுக்கவேண்டிய முக்கியமுடிவு

முக்கியமான முடிவொன்றை நீங்கள் எடுக்க வேண்டியிருக்கிறது. உங்கள் குடும்பத்தின் மகிழ்ச்சிக்கு ஓர் அடையாளமாக உங்களது முடிவு அமையலாம். உங்களுடைய வகுப்பினருக்கும் அது நலம் அளிக்கலாம். அந்த முடிவு நிச்சயமாக நாட்டையும் வலிமையுடையதாகவும், சீரும், சிறப்பும் பெறுவதாகவும் செய்ய முடியும்.

இரண்டு அல்லது அதிக பட்சம் மூன்று குழந்தைகளைக் கொண்ட சிறிய தொரு குடும்பத்தைப் பெற்றிருக்க வேண்டும் என்பது தான் அந்த முக்கிய முடிவாகும்.

இந்த முடிவை நீங்கள் மேற்கொள்ளாமலோ அல்லது செயல் படுத்தாமலோ இருப்பீர்களானால், மக்கள் தொகைப் பெருக்கத்திற்கும் நாட்டின் பற்றுக் குறைக்கும் உடந்தையாவீர்கள்.

இரண்டு அல்லது மூன்று குழந்தைகளுடன் நிறுத்திக் கொள்வதன் மூலம், ஆயிரம் பேருக்கு 41 என்று இருக்கும் பிறப்பு விகிதத்தை 25 ஆகக் குறைப்பதற்கு நீங்களும் உதவலாம்.

ஒவ்வொரு ஆண்டிலும் 1·3 கோடி வீதம் நமது மக்கள் தொகை உயர்ந்து வருகிறது. நம் நாட்டில் ஏற்கெனவே 51·5 கோடிக்கும் அதிகமான மக்கள் இருக்கிருர்கள்.

இவ்விதம் மக்கள் தொகை வளர்ந்து கொண்டே போனுல், இந்த நூற்ருண்டின் இறுதிக்குள் மக்கள் தொகை இரு மடங்காகி விடும். சுதந்திரத்திற்குப் பிறகு பெற்ற அபிவிருத்தி நலன்கள் அனைத்தும் கடலில் கரைத்த பெருங்காயமாக ஆகிவிடும். சுதந்திரத்துக்கு முன்பிருந்த நிலையுடன் ஒப்பிடுகையில், இன்று 3·1 கோடி வேலைகள் கூடுதலாக உள்ளன; கல்வி வசதிகள் 300 சதவிகிதம் பெருகியுள்ளன. ஆண்டு தோறும் கூடுதலாக 2 கோடியுடன் உணவு பெற்று வருகிருேம். ஆயினும், துரிதமான மக்கள் தொகை பெருக்கத்தின் காரணமாக, இந்த வசதிகள் எல்லாம் குறைந்து விட்டிருக்கின்றன. உணவு குறைவாகத் தான் நமக்குக் கிடைக்கிறது. வேலைகளின் எண்ணிக்கையும் குறைவு; பள்ளியில் சேராத குழந்தைகளோ அதிகம். ஒவ்வொரு நிமிஷமும் நமது ஜனத் தொகை வளர்ந்து வருகிறது; ஆனுல் நமது வசதிகளோ அவ்வாறு அதிகரிக்கவில்லை.

பட்டினியிலிருந்து விடுதலை, அச்சத்திலிருந்து விடுதலை, பேச்சுச் சுதந்திரம், வாய்ப்புக்களைப் பயன்படுத்திக் கொள்வதற்குச் சுதந்திரம்- இவைதான் சுதந்திரம் என்பதற்குப் பொருள்.

உலர்ந்த வயிறு, வேலையின்மை, முறையான வளர்ச்சிக்கு வாய்ப்புகள் இல்லாமை, இவை சுதந்திரத்துக்கே விரோதிகள்.

நம்மைஇன்றுஎதிர்கொண்டிருக்கும் பிரச்னைகள் அனைத்துக்கும் நாமேதான் பொறுப்பாளிகள். அபிவிருத்திப் பயன்களைக் காட்டிலும் அதிக வேகத்தில் நமது மக்கள் தொகையைத் தொடர்ந்து பெருக்க வந்திருப்பதுதான் நாம் செய்துள்ள பிழை.

அபிவிருத்தி ஏற்பட்டு மக்கள் இன்றும் அதிக வசதிகளைப் பெறும்போது மக்கள் தொகை குறைந்து விடும். ஏனென்ருல், சிறு குடும்பம்தான் பொருளாதார ரீதியில் பலம் பெற்றிருக்கும்.

நமது பிறப்பு விகிதம் ஆயிரம் பேருக்கு 41 என்ற அளவில் இருக்கிறது. இந்த 41 குழந்தைகளில், 9 தலைச்சன் குழந்தைகள், எட்டு இரண்டாவதாகப் பிறக்கும் குழந்தைகள், எட்டு மூன்ருவதாகப் பிறக்கும் குழந்தைகள்; 16 குழந்தைகள், நான்காவதாகவோ, ஐந்தாவதாகவோ அல்லது பன்னிரண்டாவது வரையில் பிறக்கின்றன. எனவே முதலிரண்டு அல்லது மூன்று குழந்தைகளுடன் நிறுத்திக் கொண்டால் பிறக்கும் குழந்தைகளின் எண்ணிக்கை 43 சதவிகிதம் குறைந்துவிடும்.

இரண்டு, மூன்றுகுழந்தைகளுடன் நிறுத்திக்கொள்ளாவிட்டால், மிகவும் துரிதமாக மக்கள் தொகை தொடர்ந்து பெருகிக்கொண்டே போகும்.

ஆனுல், சிறிய குடும்பம் என்னும் கொள்கையைக் கடைப் பிடிப்போமானுல், 1967 வாக்கில் 50 சதவிகித குழந்தைகள் குறைவாகப் பிறக்கும்; 1984-ல் 25 சதவிகிதம்தான் குழந்தைகள் பிறக்கும். இது குடும்பக் கட்டுப்பாடு நடவடிக்கையினுல் தான் சாத்தியமாகும்.

இரண்டு மூன்று குழந்தைகள் கொண்ட குடும்பத்தில் ஆரோக்கியம் சிறந்திருக்கும். குழந்தைகள் திடமாக வளர்வதற்கு இப்போதிருப்பதைவிட மேலான வசதிகளை அந்தக் குடும்பங்கள், அவைஎந்தப்பொருளாதார வகுப்பைச் சேர்ந்தவையாயினும், அனுபவிக்கமுடியும். குழந்தைகளுக்கும் குடும்பத்திற்கும் வருங்காலத்திற்காக சேமிக்கவும் இயலும்.

காலம் தாழ்த்தி மணம் செய்து கொள்வதன் மூலம் சிறிய குடும்பத்தைப் பெற முடியும். படிப்பை முடித்து, வசதியாக வாழ்வதற்குப் போதிய வருவாய் பெறத் தொடங்கிய பிறகு ஆணும் பெண்ணும் மணம் செய்து கொள்வது உசிதமானது.

ஒரு சிறிய குடும்பத்தைப் பெறத் திட்டமிடுவது எளிது. ஒரு குழந்தைபிறந்துசிறிது காலம் சென்றபின் இன்னெரு குழந்தையைப் பெறலாம்.

இதன் பயனுக, தாய் பூரண குணமடைவதற்கும், குழந்தையைச் சரியாகக் கவனித்து வளர்ப்பதற்கும் முடியும். சிறிய குடும்பத்தில் குழந்தைகளுக்கு ஆரோக்கியமான, பக்குவமான சூழ்நிலை இருக்கும். பெரிய குடும்பங்களைவிட சிறிய குடும்பங்களில், பதற்ற நிலையும், கவலைகளும் குறைவாகத்தான் இருக்கும்.

சிறிய குடும்பத்தைப் பெறத்திட்டம் இடுவதற்கு, செந்நிற முக்கோணச் சின்னங்கள் காணப்படும் ஸ்தாபனங்களை நாடுங்கள். குடும்பக் கட்டுப்பாடு பற்றிய ஆலோசனைகளும், வசதிகளும் உங்களுக்கு இங்கே கிடைக்கும்.

உங்கள் குடும்பத்தைச் சிறியதாகவே வைத்திருக்க இந்தச் சின்னம் வழிகாட்டுகிறது. அதன் மூலம், நாட்டின் வளர்ச்சிக்கும் உயர்வுக்கும் நீங்கள் உதவுவீர்கள் அல்லவா!

# நல்ல விதை விதைத்து நிரம்ப லாபம் பெறுங்கள்

விஞ்ஞானம், மகசூலை அதிகரித்துப் பயிர்த் தொழிலை லாபகரமாக்க அநேக வழிகள் கண்டுபிடித்திருக்கிறது.

குள்ளக் கோதுமை, சோளம், கம்பு இவைகளைப் பயிரிட்டால் பரப்பை அதிகரிக்க வேண்டிய அவசியமில்லாமலேயே உற்பத்தியைப் பெருக்கலாம்.

பயிரின் தரமும் மகசூலும் முக்கியமாக விதையின் தரத்தைப்பொறுத்திருக்கின்றன. எவ்வளவுக் கெவ்வளவு விதையின் தரம்உயர்ந்திருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு விளைச்சலின் தரமும் மகசூலும் உயரும்.

நல்ல விதைக்கு இரண்டு தன்மைகள் இருக்க வேண்டும். ஒன்று; அதிக மகசூல் தரும் தன்மை; இரண்டு; நோய், பூச்சி இவைகளால் பாதிக்கப் படாமலும், களத்திலேயே இயந்திரங்களினால் பாதிக்கப்படாமல், முழுமையான-புஷ்டியான விதைகளாக இருக்கவேண்டும்.

•

இம்மாதிரியான விதைகளைத் தயாரிப்பது விஞ்ஞான நுணுக்கம் நிறைந்த தொழில். இதற்குத் தனிப் பயிற்சி வேண்டும். பயிர்த் தொழில் செய்வோர் எல்லோராலும் இம்மாதிரியான, தரம் மிகுந்த விதைகள் தயார் செய்ய முடிவதில்லை. அவர்கள் அரங்சாங்க அங்கீகாரம் பெற்ற விதைகளை உபயோகிக்கலாம்.

சுத்தமான, கலப்படமற்ற விதைகளை மூன்று நிலைகளில் தயாரிக்கிறார்கள்.

முதலாவதாக: இனப் பெருக்கம்செய்வோரின் மூல விதையை விவசாய ஆராய்ச்சி நிலையங்கள் தருகின்றன.

இரண்டாவதாக: தேசீய விதைக் கார்ப்போரேஷனும் இதர விதைப் பெருக்க நிலையங்களும் மூல விதையிலிருந்து ஆதார விதைகளைப் பெருக்கும்.

மூன்றாவதாக: விதைப் பெருக்கம் செய்ய அரசாங்க அதிகாரம் பெற்றவர்கள் ஆதார விதையைப் பெற்று, அதைப் பெருக்கி, பதிவு செய்யப்பட்ட சான்றுபெற்ற விதைகளை வினியோகம் செய்கிறார்கள்.

அரசாங்க அங்கீகாரம் பெற்ற விதைகள் தரம், சுத்தம், அதிகப் பலன் தரும் குணம் இவைகளில் சிறந்தவை. விதைக்குணத்தைப் பரிசோதிக்க விதைப் பரிசோதனைச் சாலைகள் பெரிமளவில் உதவுகின்றன.

கேரளம், அஸ்ஸாம் இவ்விரு ராஜ்யங்களைத் தவிர மற்றஎல்லா ராஜ்யங்களிலும் விதைப்பரிசோதனைச் சாலைகள் நிறுவப் பட்டிருக்கின்றன. மேற்சொன்னஇருராஜ்யங்களிலும் கூட, சீக்கிரமே இப்பரிசோதனைச் சாலைகள் நிறுவப்படும்.

தற்சமயம், தேசீய விதைக் கார்ப்போரேஷன் இரு பிறவி மக்காச்சோளம், சோளம், கம்பு விதைகள் தயாரித்து வினியோகம் செய்கிறது. இதைத் தவிர புது தில்லியிலிருக்கும் இந்திய விவசாய ஆராய்ச்சிக் கௌன்சிலின், சென்ட்ரல் வெரைடீஸ் ரிலீஸ் கமிட்டியின் சிபாரிசின் பேரில், தேசீய விதைக் கார்ப்போரேஷன் மேம்படுத்தப் பட்ட காய்கறி, மற்றும் இதரதானியங்களின் விதைகளை அதிகரித்து வினியோகமும் செய்கிறது.

1500 ஏக்கர் கொண்ட இரண்டு ஆதார விதைப் பண்ணைகளை தேசீய விதைக் கார்ப்போரேஷன் நிறுவியிருக்கிறது. இப்பண்ணைகளில் இயந்திரங்களால் சாகுபடி செய்யப்படுகிறது.



அரசாங்க அங்கீகாரம் பெற்ற, அல்லது அரசாங்கத்தில் பதிவு செய்துகொண்ட சில தனிப்பட்டோர்களும் இவ்விதைகளைத் தயாரிக்கிறார்கள். இதற்கு இவர்கள் தேசீய விதைக் கார்ப்போரேஷன் வினியோகிக்கும் விதைகளை மூல விதையாக உபயோகிக்கிறார்கள். விதையின் தரம்குறையாமலிருக்க, இவ்விதைகள் சாகுபடிசெய்யும் பண்ணைகள் தொழில் நிபுணர்களால்மேற்பார்வையிடப்படுகிறது.

தேசீய விதைக்கார்ப்போரேஷன் தயாரிக்கும் எல்லா விதைகளுமே சர்வதேச தரநிர்ணயத்துக் கேற்றவாறு தயாராகியவை. ஒவ்வொரு விதையின் தரமும் முன்னமேயே தீர்மானிக்கப்பட்டு, அதற்கேற்றவாறு தயாரான விதைகளையே இக்கார்ப்போரேஷன் விற்கிறது.

மேம்படுத்தப்பட்ட விதைகளைத் தயாரிக்க, நாட்டில் மும்முறமான முயற்சிகள் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. இம்மாதிரித் தயாரான விதைகளின் விளையும் தரத்தை வெவ்வேறு ராஜ்யங்களில் பெருவாரியான

[ 7-ம் பக்கம் பார்க்க ]






| | | |
|---|---|---|
| மலர் : 33 | ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும் | 1967 |
| இதழ் : 5 | தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே | டிசம்பர் : 24 |



# மாணவர் உலகம்

அரசியல் விவகாரங்களில் மாணவர்கள் கலந்துகொள்வதும் தீவிரமான வேகம் காட்டுவதும் நேரடிப் போராட்டம் அதிகமாகி வருகிறது.

தேசிய விடுதலைப் போராட்டத்தின்போது, மாணவர்கள் கல்விச் சாலைகளைவிட்டு வெளியேறிக் கிளர்ச்சிகள் செய்வதென்ற வழியை இந்த நாட்டில் முதன்முதலில் அறிமுகப் படுத்தினர்கள். இன்று ஆட்சி முறையில் கலவர நிலையை உண்டாக்கும் வரையிலும் அது வளர்ந்து வந்திருக்கிறது.

அன்னியரோடு போராடி அடிமைத்தனத்திலிருந்து விடுபடுவதற்காக ஒரு நாட்டுமக்கள் நடத்தும் போராட்ட அடிப்படை, விடுதலைபெற்ற நாட்டுமக்கள் தங்கள் சொந்த ஜனநாயக அரசாங்கத்துடன் தொடர்பு கொள்ளவேண்டிய அடிப்படை இரண்டும் வெவ்வேருனவை. என்ன செய்வது? ஜனநாயக நாட்டில் அரசியல் கட்சிகளுக்கு ஆரவாரம் செய்வதற்கு மாணவர் படை மிகவும் இன்றியமையாததாக ஆகிவிட்டது. ஆளுங்கட்சியாக இருந்தாலும் சரி, எதிர்க்கட்சியாக இருந்தாலும் சரி, அத்தனை பேரும் மாணவர் உணர்ச்சியை மூலதனமாகக் கொண்டு இயங்க வேண்டியவர்களாக இருக்கிருர்கள்.

மாணவர் கிளர்ச்சிகளில் ஏற்பட்டுள்ள நாசவேலைகளுக்கு சமூக விரோதிகள் காரணமென்று கூறப்படுகிறது. சமூகவிரோதிகள் என்று தனியாக ஒரு கும்பல் இருப்பதாக இதற்குப் பொருள் கொள்ள வேண்டியிருக்கிறது. ஓரளவு இது உண்மையாகவும் இருக்கலாம். சமூக விரோத உணர்ச்சிகளில் மாணவர்களைப் பயிற்றுவிக்கும் கிளர்ச்சிகளாகவே இவை அமைந்து விடுகின்ற கொடுமையைச் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

பெரும் சிக்கல்களை பெரியவர்கள் பார்த்துக் கொள்வார்கள் என்று இளைஞர்கள் அமைதியாகக் கல்வியில் கவனம் செலுத்த வேண்டும். அதிலும் தமிழகத்தில் ஆளுங்கட்சியே இந்தி எதிர்ப்புக்கு முனைந்து நிற்கும்போது தமிழ் நாட்டில் நாசவேலைக் கிளர்ச்சிகள் நடைபெறுவது ஆட்சிக்கோ தமிழகத்துக்கோ வலிமைதராது பெருமையும்தராது. இந்தி எதிர்ப்பாளர்களையே ஆட்சியிலும் நாம் அமர்த்தியிருக்கும் போது அவர்கள் ஆட்சிக்குச் சிக்கல் விளைவிக்காமல் அமைதியாகப் பின் நின்று ஆதரித்தாலே போதுமே. இந்தி எப்படி அரியணை ஏறிவிடும்?

# புற்று நோய் சிகிச்சைக்கு புதுமைக் கருவி

'காஸ் ஸென்ட்ரிஃப்யூஜ்' அணு குண்டுகள் செய்வதற்கான ஒரு கருவி. புற்று நோயை இறுதியாக வெல்வதற்கு இக்கருவி இப்பொழுது துணை செய்யக் கூடும்.

மிகமிக வேகமாகச் சுழலும் கருவி இது. யு. எஸ். அணுவிசைக் குழு அமைந்திருக்கும் இக்கருவிபலப்பல அமைதிப் பணிக்கு ஏற்கெனவே பயன்படுத்தப்பட்டிருக்கிறது. இளம் பிள்ளை வாதம், சிச்சிலுப்பை போன்ற மனிதர்களுக்கு வரும் வைரசு நோய்களைத் தடுக்க, சுத்தமான, பத்திரமான, பயன்மிக்க வாக்ஸீன்களைத் தயாரிப்பதற்கு இக்கருவி பயன்படுத்தப்பட்டிருக்கிறது.

ஆயினும் புற்று நோய் ஆராய்ச்சித் துறையில் தான் இந்த 'ஸென்ட்ரிபூஜ்' கருவி மக்கள் குலத்துக்கே பெரும் நன்மை செய்யவிருக்கிறது.

'இது அணுவிசைத் திட்டத்தின் (ஏ. இ. ஸி.) ஒரு முக்கிய, சற்றும் எதிர்பாராத துணைப் பொருளாகும் என்றார், ஆல்வின் வின்பெர்க். டென்னஸ்ஸி மாநிலத்தில் ஆக்ரிட்ஜ் என்ற விடத்தில் இருக்கும் ஏ. இ. ஸி. யின் தேசிய ஆய்வுக் கூடத்து டைரக்டர் இவர். இந்த ஆய்வுக்கூடத்தில்தான் ராணுவ ஸென்ட்ரிஃப்யூஜ் மருத்துவப் பணிக்காக மாற்றப்படுகிறது.

200 புற்று நோயாளிகள் அமெரிக்கா நெடுகிலும் மருத்துவ இல்லங்களில் சோதிக்கப்பட்டு வருகின்றனர். நோயாளிகளிடமிருந்து மாதிரி ரத்தம் எடுத்து அந்த மாதிரிகளை மிக வேகமாகச் சுழலும் ஸென்ட்ரிஃப்யூஜ் கருவி கொண்டு கடைவது இந்தச் சோதனையில் அடங்கும்.

அசல் வைரசுகளின் மிக நுண்ணிய துண்டுகள்தான் டி-ஆண்ஜென்ஸ்; வைரசுகளே மைக்கிராஸ்கோப்புகளினுல் பார்க்க முடியாதபடி மிக நுண்ணியவையாக இருக்கின்றன. டி-ஆண்டிஜென்ஸ், அது தாக்கும் ஆரோக்கியமான செல்லுக்குள் புகுந்து உள்ளணுவில் ஒளிந்து கொண்டு விடுகிறது.

நோயாளிகளிடமிருந்து, எடுக்கப்பெற்ற மாதிரி ரத்தத்தை ஸென்ட்ரிஃப்யூஜ் கருவிகொண்டு கடைந்து, டி-ஆண்டிஜனை, பிற பொருள்களிலிருந்து பிரித்தெடுத்துவிட ஆராய்ச்சியாளர்கள் முயலுவர்.

——

[1-ம் பக்கத் தொடர்ச்சி]

இந்தியா மிகவும் மேலான ஒரு வாழ்க்கைநிலையையும், அதன் மக்கள் அனைவருக்கும் விரிவானவாய்ப்புக்களையும் அடையுமாறு செய்வதில் மிகவும் முக்கியமான பணியாற்ற முடியும். எனினும், நாம் மீண்டும் கெடுபிடிப் போர் சூழ்நிலையில் சறுக்கி விடுவோமாளுல் உங்களது ஒலிபரப்புக்கள் இதற்குத்தான் வழிசெய்கின்றன என்றே நான் கருதுகிறேன். ரஷ்யர்கள், அமெரிக்கர்கள், இந்தியர்கள் ஆகிய நமக்குத்தான் நஷ்டம்; வரலாற்றுச் சிறப்புள்ள ஒரு வாய்ப்பு கை நழுவிப் போய்விடும்.

மாபெரும் இந்நாட்டில் நாம் பொதுவானவைஎன்று கருதும் இலட்சியங்கள் கைகூட புதுடில்லியிலுள்ள அமெரிக்கத் தூதரகம் எல்லா வழிகளிலும் ஒத்துழைக்கும் என்று நான் உறுதி கூற முடியும்.

# குடும்பத் தலைவர் யார் ?

— எல்லா செரப்பக்கோவா

சின்னஞ்சிறு சிறுவன் ஒருவன் தனது குழந்தைப் பள்ளி ஆசிரியரிடம் இவ்வாறு கேட்கிறான்: 'குடும்பத்தில் தலைவர் யார்? அம்மாவா? அப்பாவா?'

'இருவரும்தான்' எனப் பதிலளிக்கிறார் ஆசிரியர். ஆனால் உண்மையில் இன்றைய குடும்பத்தில் தலைவர் யார்? மனைவியா? கணவனா?

புரட்சிக்குமுந்திய பழைய ரஷ்யாவில் குடும்பத்தைப் பராமரிக்கும் தந்தை அல்லது கணவர் 'சம்பாதித்துப் போடுபவர்' என்றே அழைக்கப்பட்டார். குடும்பத்திலுள்ள மற்றவர்கள் அவரைச் சார்ந்தவர்களாக இருந்தனர்; அல்லது யெதோக்கியாக, அதாவது 'தின்பவர்களாக' இருந்தனர். எனினும் கடந்த காலத்தில் பெண்களும் வீட்டுவேலைகளைக் கவனிப்பதிலும் குழத்தைகளை வளர்ப்பதிலும் அரும்பாடுபட்டு உழைத்தனர். சமுதாய அமைப்பின் மாற்றம் வாழ்வின் சகல துறைகளையும் புரட்சிகரமாக மாற்றி விட்டது. பெண்கள் ஆண்களோடு சமமான உரிமைகளைப் பெற்றனர்; கல்வியும் அவர்களுக்கு எளிதில் கிட்டியது. தாம் பெற்ற சமதையான அந்தஸ்தினால் அவர்கள் ஆண்களைப்போல் எந்த வேலையிலும் சேரவும், சமமான சம்பளம் வாங்கவும் முடிந்தது.

ஒரு முறை நான் குடும்பத்தைப் பற்றி எழுத நேர்ந்தது. அக் குடும்பத்தில் மனைவி காம்சொமாலின் மத்தியக்கமிட்டிச் செயலாளராக இருந்தாள்; அதே சமயம் அவள் பட்டப் படிப்புக்கும் படித்து வந்தாள். கணவர் தலைமைப் பூகர்ப்பவியலாளராக இருந்து வந்தார்.

இந்தப் பெண்மணியின் பெயர் குல்த் ஜாக்கோன் பொபோசதிக்கோவா. முற்காலத்தில் பெண்களைக் கொடுமையாக நடத்தி அடிமைப்படுத்திவந்த தாஜிக்ஸ்தானில் இவள் வசித்து வருகிறாள்.

குல்த்ஜாக்கோன் புதுமைப் பெண்ணைப் பிரதிநிதித்துவப் படுத்துகிறாள். குடும்பத்தில் ஒவ்வொரு துறையிலும்—கல்வி, பொது நடவடிக்கைகள் மற்றும் விளையாட்டுப் போட்டிகளிலும்கூட அவள் தனக்கென்று ஒரு ஸ்தானத்தைப் பெற்றிருக்கிறாள். உண்மையில் அந்தக் குடும்பத்தில் 'இரு தலைவர்கள்' உள்ளனர்.

எனினும் 'குடும்பத் தலைவர்' யார் என்று சட்டென்று சொல்லிவிடக்கூடிய பல தம்பதிகளையும் நான் அறிவேன். இதற்கு எனது அண்டை வீட்டாரும் நண்பர்களுமான யூலியாவும் ஸ்வாலாவும் நல்ல உதாரணம் ஆவர். ஸ்லாவா கல்லூரி ஆசிரியர்; அவரது மனைவி யூலியாவோ இன்னும் பட்டப் படிப்பு மாணவியாகத்தான் இருக்கிறாள். கணவர் வயதில் மூத்தவர்; மனைவியைக் காட்டிலும் மிகுந்த உலகியல் ஞானமும், உறுதி வாய்ந்த இயல்பும் கொண்டவர். யூலியாவும் இதை ஒப்புக்கொள்கிறாள்; எனவே பல விஷயங்களில் கணவரோடு கலந்து பேசி அவரது ஆலோசனைப் படியே நடக்கவிரும்புகிறாள். ஆனால் யூலியா இதனை நிர்பந்தம் காரணமாகச் செய்யவில்லை அவர்மீது கொண்ட காதலினாலும் மதிப்பினாலும் தான் செய்கிறாள்.

இருவரும் மனமொத்த தம்பதிகள்; அவர்களுக்கு சிறு பெண் குழந்தையொன்றும் உள்ளது. பல குடும்பங்களில் நிலவும் வழக்கப்படியே ஸ்லாவா தமது சம்பாத்தியத்தையெல்லாம் மனைவியிடமே கொடுத்து விடுகிறார்; யூலியா படிப்பில் மும்முரமாக ஈடுபட்டிருந்த போதிலும், குடும்பத்தை அவள்தான் நடத்துகிறாள்;

[ 8-ம் பக்கம் பார்க்க]

# குடும்பம் சிறிதாக இருக்க வேண்டுமா ?

நாம் சுதந்திரப் பேறு பெற்றதிலிருந்து இந்த இருபதாண்டுக் காலத்திலும் முன்னேற்றமே நமது இலட்சிய நோக்காக இருந்து வந்திருக்கிறது.

நம் பொருளாதாரம் ஆண்டுதோறும் 3·8 சதவிகிதம் வீதம் வளர்ச்சியடைந்து வந்திருக்கிறது. சுதந்திரத்துக்கு முந்தைய காலத்தில் இந்த வளர்ச்சி விகிதம் ஒரு சதவிகிதத்துக்கும் குறைவாகவே இருந்தது.

தொழில்துறை உற்பத்தி 150 சதவிகிதம் கூடுதலாகியிருக்கிறது.

உணவு உற்பத்தி 61.8 சதவிகிதம் அதிகரித்திருக்கிறது.

பள்ளிக்கூடம் செல்லும் குழந்தைகளின் எண்ணிக்கை மும்மடங்கு அதிகரித்து 7 கோடியே 20 லட்சம் ஆகியிருக்கிறது. இப்போது 10 குழந்தைகளுக்கு 8 குழந்தைகள் வீதம் (6-11வயது) பள்ளிக்கூடம் செல்லுகின்றனர்; பதினைந்து ஆண்டுகட்கு முன்பு இது 10-க்கு 4ஆக இருந்தது.

பொதுசுகாதார வசதிகள் பெருமளவில் அதிகரித்துள்ளன. இப்போது மருத்துவ மனைகளும் மருந்தகங்களும் இரட்டித்திருக்கின்றன; மருத்துவ மனைப் படுக்கைகளின் எண்ணிக்கை மும்மடங்காக அதிகரித்திருக்கிறது; மருத்துவர்களின் எண்ணிக்கை இரட்டித்திருக்கிறது; நர்ஸ்களின் எண்ணிக்கை ஆறு மடங்கு அதிகரித்திருக்கிறது. பெரிய தொற்று நோய்களும் ஒழிக்கப்பட்டிருக்கின்றன அல்லது கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவரப்பட்டிருக்கின்றன.

இந்த முன்னேற்றத்தின் பலனாக, மரண விகிதம் 1000-க்கு 27-லிருந்து 16 ஆகக் குறைந்திருக்கிறது; மனிதனின் வாழ்நாள் சுதந்திரத்துக்கு முன்பு 27 ஆண்டுகளாக இருந்தது இப்போது 52 ஆண்டுகளாக அதிகரித்திருக்கிறது.

ஆனால்......

ஆனால், இவ்வளவு முன்னேற்றம் ஏற்பட்டிருந்துங்கூட, நமது நபர் விகித உபயோக உணவின் அளவு 12.8 அவுன்ஸிலிருந்து 12.4 அவுன்ஸாகக் குறைந்துவிட்டிருக்கிறது. இன்னும் 6 கோடியே 38 லட்சம் குழந்தைகள் (6-11வயது) பள்ளிக்கூடம் செல்லவில்லை; ஒரு கோடி இளைஞர்கள் வேலை இல்லாமல் இருக்கின்றனர்.

முன்னேற்றத்தின் மூலம் கிடைத்துள்ள பலன்களை நாம் அனுபவிக்க இயலவில்லை. காரணம் வருமாறு: நமது மக்கள் தொகை 1947-ம் ஆண்டிலிருந்து 43 சதவிகிதம் அதிகரித்திருக்கிறது, அதாவது 35 கோடியிலிருந்து 50 கோடியாக அதிகரித்திருக்கிறது; 1947-ல் நாடு பிரிவினையானதற்கு முன்பு இருந்ததைவிட இப்போது அதிக மக்கள் இருக்கிறார்கள்; இப்போது ஒவ்வொரு நாளும் 55,000 குழந்தைகள் பிறக்கின்றன; அதாவது ஒன்றரை விநாடிக்கு ஒரு குழந்தை வீதம், அல்லது ஒவ்வொரு ஆண்டுக்கும் 2 கோடியே 10 லட்சம் குழந்தைகள் வீதம் பிறந்துகொண்டிருக்கின்றன.

ஆண்டுதோறும் சுமார் 80 லட்சம் பேர் இறக்கின்றனர்; ஆண்டுதோறும் நமது மக்கள் தொகை ஒரு கோடியே 30 லட்சம் வீதம் அதிகரித்து வருகிறது.

நமது மக்கள் தொகை ஆண்டுதோறும் மிகப் பெருமளவில் அதிகரித்துக் கொண்டு வருகிறது. இவ்வாறு ஆண்டுதோறும் கூடுதலாக அதிகரித்து வரும் மக்களுக்கு மட்டும், நாம் அதிகப்படியாக 1,26,500 பள்ளிக்கூடங்களைத் திறந்தாகவேண்டும்; 3,72,500 பள்ளி ஆசிரியர்களை நியமித்தாகவேண்டும்; 25,09,000 வீடுகளைக் கட்டியாகவேண்டும்; மொத்தம் 18,77,74,600 மீட்டர் துணி உற்பத்தி செய்தாகவேண்டும்; 12,54,300 குவிண்டால் உணவுப் பொருள்களுக்கு வகை செய்தாகவேண்டும்; மேலும் 43,30,000 உத்தியோகங்களை ஏற்படுத்தியாகவேண்டும்.

வேறுவகையில் சொல்ல வேண்டுமானால், சென்ற இருபதாண்டு சுதந்திர வாழ்வில் நாம் எந்த அளவுக்கு முன்னேற்றம் அடைந்திருக்கிறோமோ அந்த அளவுக்காவது ஒவ்வொரு மாதமும் நாம் முன்னேற்றம் எய்தக்கூடியபடி, நமது முன்னேற்ற வேகத்தைத் துரிதப்படுத்தியாக வேண்டும்.

இயலாது. இருபதாண்டுக் காலத்தில் எய்தப்பட்டுள்ள ஒரு சாதனையை ஒரு மாதத்தில் அல்லது ஒரு

---

திருச்சி சப் கோர்ட்
O.S. 151/50 E.P. 697/67.

K. C, பலராமன் —மனுதார்.
அங்கம்மாள் மருதமுத்து
— 3, 4 பிரதிவாதிகள்

ஷ மனுதார் ஏலசர்ட்பிகேட்டுப் படிக்கு சொத்தை ஸ்வாதீனம் செய்துகொள்ள முடியாமல் நீங்கள் செய்த தடையை நீக்கி, ஸ்வாதீனத்திற்கு மனுக்கொடுத்து, 9—1—68 தேதி முற்பகல் 11 மணிக்கு விசாரணைக்கு போட்டிருப்பதில், உங்களுக்கு, ஏதாவது ஆக்ஷேபணையிருந்தால் ஆஜராகி தெரிவித்துக் கொள்ளாவிடில் ஒருதலைப்பக்ஷமாக தீர்ப்பு செய்யப்படும்.

M. கிருஷ்ணசாமி சாஸ்திரி
1/7652/88 அட்வகேட்.

ஆண்டில் செய்துமுடிப்பது ஒருபோதும் இயலக்கூடிய காரியமல்ல. இந்த இலட்சியத்தை நாம் ஒருபோதும் எய்த முடியாது.

மக்கள் தொகை இவ்வளவு துரித வேகத்தில் தொடர்ந்து அதிகரித்துக் கொண்டேபோனால், முன்னேற்றத்தை எய்துவதற்கு நாம் மேற்கொள்ளும் முயற்சிகள் அனைத்தும் வியர்த்தம் ஆகிவிடும்; அதிகப்படி வசதிகள் அல்லது உதவிகள் நமக்குக் கிடைத்து வருகின்றபோதிலுங்கூட 1970-வாக்கில் மிக மோசமான பஞ்ச நிலையை நாம் சமாளிக்க வேண்டியிருக்கும்.

இந்த இலட்சியம் நடைமுறை சாத்தியமாக இல்லாதிருப்பதால், நமது இலட்சியம் நடைமுறை சாத்தியமாக இருப்பதற்கு நாம் என்ன செய்யவேண்டும்? இந்த மாபெரும் விபரீத நிலையை நாம் அகற்றிவிட முடியும். அதாவது பொருள்களின் உற்பத்தியை பெருக்குவதன் மூலமும், பிறப்பு விகிதத்தை 1000-க்கு தற்போது 41-ஆக இருப்பதை உடனடியாக 25-க்குக் குறைப்பதன் மூலமும் நாம் இந்த பெருநாசத்தை அகற்றிவிட முடியும்.

குழந்தை பெறும் வயதுள்ள ஒன்பது கோடி தம்பதிகள் குடும்பக்கட்டுப்பாடு முறைகளை அனுசரித்து, இரண்டு அல்லது அதிகபட்சம் மூன்று குழந்தைகளுக்குமேல் பெறாமல் தங்களுடைய குடும்பங்களை மகிழ்ச்சிகரமான சிறிய குடும்பங்களாக ஆக்கிக் கொள்வார்களானால் பிறப்பு விகிதத்தைக் குறைத்துவிடலாம்.

மொத்தம் 41 குழந்தைகள் பிறக்கின்றன என்றால், அவற்றில் ஒன்பது குழந்தைகள் அவற்றின் பெற்றோர்களுக்கு முதல் குழந்தைகளாகவும், எட்டு குழந்தைகள் இரண்டாவது பிறந்த குழந்தைகளாகவும், எட்டு குழந்தைகள் மூன்றாவது பிறந்த குழந்தைகளாகவும், 16 குழந்தைகள் நான்காவது முதல் 12-வது வரை பிறந்த குழந்தைகளாகவும் உள்ளன.

மக்களுக்கு இரண்டு அல்லது மூன்று குழந்தைகள் மட்டுமே இருந்தால், பிறப்புக்களின் எண்ணிக்கை சுமார் 43 சதவிகிதம் குறைந்துவிடும்; இதன் பலனாக ஆண்டுதோறும் 1 கோடியே 40 லட்சம் குழந்தைகளே பிறக்கும்.

காலம் தாழ்த்தித் திருமணம் செய்வதன் மூலமும், கருத்தடை சாதனங்களை வழக்கமாக உபயோகித்துக்கொள்வதன் மூலமும் குடும்பம் சிறிய அளவில் அமைந்திருக்கும்படி பார்த்துக் கொள்ளமுடியும். ஒரு தம்பதிக்கு ஏற்கெனவே மூன்று குழந்தைகள் இருக்குமேயானால், கணவனோ அல்லது மனைவியோ கருத்தடை அறுவைச் சிகிச்சை செய்துகொள்ளலாம்.

உங்கள் அருகாமையிலுள்ள குடும்பக் கட்டுப்பாடு திட்ட நிலையத்திற்குச் செல்லுங்கள். அங்கே உங்களுக்கு நிபுணத்துவ ஆலோசனையும் மற்ற வசதிகளும் உடனடியாகக் கிடைக்கும்.

அந்த நிலையத்தின் மூகவரி உங்களுக்குத் தெரியவில்லை என்றால், சிவப்பு முக்கோணச் சின்னம் எங்கேயிருக்கிறதோ அங்கேச்செல்லுங்கள். இதுதான் குடும்பக் கட்டுப்பாடு திட்டத்தின் சின்னம். ஒவ்வொரு பிரஜையும் வளமான நல்வாழ்வுக்கும் நாட்டின் முன்னேற்றத்திற்கும் வகைசெய்கிறது குடும்பக் கட்டுப்பாடு திட்டம்.

—

[3-ம் பக்கத் தொடர்ச்சி]

அளவில்பரிசோதித்துபார்க்கப்பட்டது.

சமீபத்தில் தயாரிக்கப்பட்ட மேம்படுத்தப்பட்ட விதைகள் பெருவாரியான மகசூல் கொடுக்கக்கூடியவை உதாரணமாக, குள்ளரகக்கோதுமை, மிகுதியான நைட்ரோஜன் உரமிட்டால் ஹெக்டேர் ஒன்றுக்கு 6,000 கிலோ மகசூல் கொடுக்கிறது உள்ளூர் ரகம் ஹெக்டேர்ஒன்றுக்கு3,000கிலோ மகசூல் தான் கொடுக்கிறது.

ஐ. ஆர்.8-28-3; ஒருகுள்ள ரக நெல் பிலிப்பைனில் உரமொன்றுமிடாமலேயே ஹெக்டேர்ஒன்றுக்கு 5,111 கிலோ மகசூல் கொடுத்தது. இதே ரகம் ஹெக்டேர் ஒன்றுக்கு 140 கிலோ நைட்ரோஜன் உரமிட்டதில் ஹெக்டேர்ஒன்றுக்கு9,411கிலோ வீதம் மகசூல் கொடுத்தது.

இதேபோல், 'ஹைஸ்டார்ச்' என்றவெள்ளை இருபிறவிமக்காச்சோளம், பெருவாரியான மகசூல் (ஹெக்டேர் ஒன்றுக்குச் சுமார் 4,000 இலிருந்து 5,000 கிலோ வரையில்) கொடுப்பதுடனல்லாமல், இதிலிருந்து 64சதவிகிதம்ஸ்டார்ச்(மாவு) சும்கிடைக்கிறது. இந்தஇரு பிறவி மக்காச்சோளம், பெருமளவில் ஸ்டார்ச் உற்பத்தி செய்யப் பயன் படுவதல்லாமல் அதன் உப பொருள்களின் உற்பத்தியையும் பெருக்க உதவும். இம்மக்காச்சோளத்தை இந்தியாவின் சமவெளிகளில் பயிரிடலாம்.

இரு பிறவிக் கம்பு ஹெக்டேர்ஒன்றுக்கு4,000கிலோ மகசூல்கொடுக்கிறது. அதேபோல் சி. எஸ். எச்-1, சி.எஸ்.எச்-2 இந்தஇரண்டு பிறவிச் சோளம் போதுமான உரமிட்டுப் பயிரைப் பூச்சி, புழுக்களிலிருந்து பாதுகாத்தால், ஹெக்டேர் ஒன்றுக்கு 6,000 கிலோ பலனளிக்கிறது.

நான்காவதுஐந்தாண்டுத் திட்டத்தில் மேம்படுத்தப்பட்ட விதைப்பெருக்கம்முக்கிய இடம் பெற்றிருக்கிறது. இத்திட்டத்தின் உணவுஉற்பத்திக் குறிக்கோள் 120மில்லியன் டன்.

ஒவ்வொரு ராஜ்யமும் நெல், கோதுமை, சோளம், மக்காச்சோளம், கம்பு அடங்க அதிகமகசூல் தரும் பயிர் வகைகள் எவ்வளவு சாகுபடி செய்ய வேண்டுமென்று இத்திட்டத்தில் வரையறுக்கப் பட்டிருக்கிறது.

மெக்ஸிகோவிலிருந்து இறக்குமதிசெய்யப்பட்ட 18,000டன் குள்ளரகக் கோதுமை விதையினால் ஏறக்குறைய ஒரு மில்லியன் ஏக்கர் நிலத்தில் லொமாரோ என்ற குள்ளரக மெக்ஸிகோ கோதுமை பயிரிடப்பட்டது. ஒவ்வொரு ராஜ்யத்திலும்5,000இலிருந்து6,000 ஏக்கர் கொண்ட விதைப் பண்ணைகள் இருக்க வேண்டுமென்று தீர்மானிக்கப் பட்டிருக்கிறது.

பயிர்ச் செலவின் லாபம்; உரம், நீர்ப்பாசனம், விற்பனைக்கான வசதிகள், இயந்திரஉபயோகம் இவைகளைப் பொறுத்திருந்தாலும், பெரும்பான்மையாக நல்ல விளைச்சல் விதையையே பொறுத்திருக்கிறது.

—

[ 5-ம் பக்கத்தொடர்ச்சி ]

கடை கண்ணிக்குப் போய் வருவதையெல்லாம் அவளே கவனித்துக்கொள்கிறாள்.

சோவியத் நாட்டில் எல்லோரதுமண வாழ்க்கையும் இவ்வாறே ஆனந்தமயமாக இருக்கும் என நினைப்பது தவறாகும்.

உதாரணமாக, எங்கள் பத்திரிகையின் ஆசிரியர் முழு அலுவலகத்தில் செய்தி கொண்டு செல்லும் பெண்ணைப் பணியாற்றும் நினா தனது முதற் குழந்தை பிறப்பதற்கு முன்பே, திருமணமான சிறிது காலத்திலேயே கணவரைவிட்டுப் பிரிந்து வந்துவிட்டாள். அலுவலகத்திலுள்ள எல்லோரும் அவள் விஷயத்தில் மிகுந்த ஆதரவு காட்டினர்; குழந்தைக்குத் தேவையான சாமான்களையும் தள்ளு வண்டியையும் வாங்கிக் கொண்டு அவளை அடிக்கடி சென்று பார்த்து வந்தனர். நினா கணவரை விட்டுப் பிரிந்துவந்ததற்குக்காரணம் “அவரது சொத்துடைமை உணர்ச்சி மிதமிஞ்சி இருந்ததுதான்” அவருக்குப் பொறாமை அதிகம்; அவர் அவளைப் பிறரோடு பேசவோ, நடனம் ஆடவோ அனுமதிக்கமாட்டார்; அவள் தொடர்ந்து படிப்பதையும் நூல் நிலையத்துக்குச் செல்வதையும் ஆட்சேபித்தார். ‘அசல் ஜாராட்சிக் காலத்து மனிதர் அவர். இந்தக் காலத்துப் பெண்ணொருத்தியைச் சங்கிலி போட்டுக் கட்டி வைத்திருக்கமுடியும் என்று அவர் எண்ணுகிறாரா? மனைவியின் மீது அத்தனை அவநம்பிக்கை இருக்குமானால், மண வாழ்க்கை நிலை குலைந்து வீழாமல் வேறு என்ன செய்யும்?’ என்று கூறினாள் நினா.

அவளது வார்த்தைகள் 50 ஆண்டுகட்குமுன்னர் ரஷ்யாவில் நிலவிய நிலைமைகளை எண்ணிப் பார்க்குமாறு செய்தன; அந்தக் காலத்தில் தன்னைவிட்டுப் பிரிந்துபோன மனைவியைத் தன்னிடம் கொண்டுவந்து கணவன் போலீஸ் உதவியைக்கூட நாட முடியும்; அவளது அடையாளச் சீட்டைப் பறிக்க முடியும்; அவளது வாழ்வையே பாழடிக்க முடியும்.

இன்று எங்கள் குழந்தைகள் ‘குடும்பத் தலைவர்யார்?’ என்று கேட்பதற்குக் காரணம் இல்லாமற் போகவில்லை. குடும்பத்திலேயே ஒருவிதமான ‘தலைவர்’ தேர்தல் நிகழ்கின்றது. எனினும் அத்தகைய ஸ்தானத்தையும்கௌரவத்தையும் எய்துவது, குடும்பத்திலுள்ள தனி நபர்களுக்கிடையே நிலவும் உறவுகள், அவர்களதுமனப் போக்குகள், பழக்கவழக்கங்கள் முதலியவற்றைச் சார்ந்ததாயுள்ளது.

எனது சிநேகிதிகளில் ஒருத்தி மாஸ்கோவுக்குஅருகிலுள்ள பள்ளியொன்றில் ஆசிரியையாகப் பணியாற்றுகிறாள். கவர்ச்சியும் பெண்மையும் மிக்கவள்; மேலும் மிகுந்த பண்பு நலமும் பெற்றவள். எதைச்செய்தாலும் எப்போதும் தீர்க்கமாகச்சிந்தித்தே செய்வாள். மேலும் அவளது மாணவர்களாகட்டும், குடும்பத்தினராகட்டும், அவர்களது அபிப்பிராயங்களையெல்லாம் தனது கருத்துக்களாலும் மாற்றிவிடக்கூடிய வல்லமையும் பெற்றிருந்தாள்.

அவளது கணவரோ இதற்கு நேர்மாறாக வீட்டிலேயே அடங்கிக்கிடப்பவர். அவளோ வெளியுலகத்தில் மிகுந்த அக்கறை காட்டுபவள். நாடக அரங்குகளுக்குச் செல்வாள்; பாடுவாள்; நல்ல சங்கீதத்தைவிரும்பிக் கேட்பாள்; இலக்கிய விவாதங்களில் ஈடுபவாள். அவர்களது பையனுக்கு சங்கீதம் வருமா என்று அவளது கணவர் மிகவும்சந்தேகப்பட்டுக் கொண்டிருந்தபோது, அவள் தன்பையனை இசைப் பள்ளிக்குத் துணிந்து அனுப்பிவைத்தாள். கடைசியில் அவள் கூறியதுதான் சரியாயிற்று; பையனிடம் திறமை இருப்பது புலனாகியது; அதனை அபிவிருத்தி செய்து கொள்வதுதான் தேவைப்பட்டது.

எனவே குடும்பத் தலைவர் என்பவர் ஒருவிதத்தில்கணவர் அல்லது மனைவியின் சொந்தத் திறமைகளின் மூலம் தேர்ந்தெடுக்கப் பெற்று அங்கீகரிக்கப்படும் ஒருவராக விளங்குகிறார். எங்களது நாட்டில் வெகு காலத்துக்குமுன்பே உதறித் தள்ளிவிட்ட அந்தப்பழைய பத்தாம் பசலிச்சம்பிரதாயங்களின் மூலம் எவரும் குடும்பத் தலைவர் ஆகிவிடுவதில்லை.



## பிரிட்டிஷ் நிதி உதவி

பிரிட்டனிலுள்ள ஃபிரண்ட்ஸ் ஆவ் வேலூர் என்ற சங்கம் சென்ற நிதி ஆண்டில், வேலூரிலுள்ள கிறிஸ்துவ வைத்தியக் கல்லூரி – ஆஸ்பத்திரிக்கு, பிரிட்டனிலிருந்து 41,000 பவுன்களை திரட்டி வழங்கியிருக்கிறது. நற்பணிகளுக்கு நிதி திரட்டி உதவுவதற்காக, பிரிட்டனில் பல இடங்களில் கிளைகளை நிறுவி செயலாற்றிவரும் இந்தச் சங்கம், வேலூர் ஆஸ்பத்திரிக்கு வைத்திய சாதனங்கள், மருந்துகள் முதலியவற்றை கொள்முதல் செய்வதற்கும் வைத்திய நிபுணர்களுடைய சேவையைப் பெறுவதற்கும் நிதி வசதியளிப்பதுடன் சென்ற நிதி ஆண்டில், வெல்கம் டிரஸ்ட், ஆக்ஸ்ஃபாம், நஃபீல்டு பவுண்டேஷன், ராயல் சொசைடி ஃபார் தி பிளைண்ட், கிளாக்ஸோ சாரிடி டிரஸ்ட் முதலிய நிறுவனங்களுக்கும் நிதி திரட்டி உதவியிருக்கிறது.

ஃபிரண்ட்ஸ் ஆவ் வேலூர், சென்ற பல ஆண்டுகளாக, லண்டனில் ஆண்டுதோறும் உதவி இசை நிகழ்ச்சி நடத்தி நிதி திரட்டி வேலூர் வைத்தியக் கல்லூரி — ஆஸ்பத்திரிக்கு உதவி வருகிறது. அடுத்த ஆண்டு மே மாதம் 2-ஆம் தேதியன்று, லண்டனிலுள்ள ஆல்பர்ட் ஹாலில் வேலூர் உதவி கச்சேரி நடத்த ஏற்பாடு செய்திருக்கிறது. இதில், சிறப்பு விருந்தாளியாகக் கலந்து கொள்ள அலிஸ் இளவரசி இசைவு தந்திருக்கிறார்கள். புகழ்பெற்ற இசைவாணர்கள் ஸர். ஏட்ரியன் போல்ட், வெர்னன் ஹான்ட்லி ஐலீன் ஜாய்ஸ், முதலியவர்கள், ஊதியம் பெறாமல், இதில் பங்கெடுத்துக்கொண்டு உதவிசெய்ய இசைந்திருக்கிறார்கள்.

Edited and Published by its owner Sri. Triloka Sitaram & Printed by him at his Shivaji News Printers, 2-A, Fort Station Road, Tiruchy-2.
Annual Subscription Including 4 special numbers Rs. 10.